


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை


## நின்றது போதும்

கண்கள் ஒளிபெற நீயும்—மனக்
கஞ்சம் எழில்பெற நானும்
நின்றது நின்றது போதும்—ஒரு
தேனின் சுவைமொழி பேசு
பெண்கள் தலைமணி நீயும்—சிறு
பிள்ளை மனத்தினன் நானும்
நின்றது நின்றது போதும்—ஒரு
தேனின் சுவைமொழி பேசு

வானக மாமதி நீயும்—சுனை
வந்த குமுதென நானும்
நின்றது நின்றது போதும்—ஒரு
தேனின் சுவைமொழி பேசு
தேனக மாமலர் நீயும்—சுவை
தேரும் சுரும்பென நானும்
நின்றது நின்றது போதும்—ஒரு
தேனின் சுவைமொழி பேசு

காந்த விசைமணி நீயும்—எதிர்
கட்டி இரும்பென நானும்
நின்றது நின்றது போதும்—ஒரு
தேனின் சுவைமொழி பேசு
தேர்ந்த கலையென நீயும்—ஒரு
சின்னச் 'சுவைமணி' நானும்
நின்றது நின்றது போதும்—ஒரு
தேனின் சுவைமொழி பேசு.

-சாலை இளந்திரையன்

## கதருக்கு ஆதரவு தருக

—

### தலைமையமைச்சர் நேரு வேண்டுகோள்

கைராட்டையிலும், அம்பர் சர்க்காவிலும் நூற்கப்படுகிற கதர்த் துணியின் உற்பத்தி சமீபகாலங்களில் கணிசமாகப் பெருகியிருக்கிறது. சென்ற ஆண்டில் 13·53 கோடி ரூபாய் மதிப்பிற்கு கதர் உற்பத்தி செய்யப்பட்டதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. விற்பனையளவும் 8·16 கோடி ரூபாயாக அதிகரித்திருக்கிறது. விற்பனையளவு அதிகரித்தபோதிலும், இது உற்பத்தி அளவிற்குச் சமமாக இல்லை. அதனால் பெருமளவு கதர் நூலும், துணியும் விற்பனையாகாமல் இருக்கின்றன.

கதர் உற்பத்தியில் சுமார் 14 லட்சம் பேர் நூற்பவர்களாகவும், துணி நெய்வோராகவும், வெளுப்போராகவும், அச்சடிப்போராகவும் பணியாற்றுகின்றனர். இவர்களில் பெரும்பாலோர் பெண்கள். ஏராளமான நூலும் துணியும் தேங்கிக் கிடப்பதால் தற்போதைய வேகத்தில் உற்பத்தியைத் தொடர்ந்து மேற்கொள்ளுவது சிரமம்; உற்பத்தியைக் குறைக்கவேண்டும் என்பதாகக்கூடப் பேசப்படுகிறது. இது மிகவும் துரதிஷ்டவசமானதாகும். இதனால் இப்பெண்களில் பலர் வேலையை இழக்கவேண்டி வரும். இதுவரையில் நாம் இத்துறையில் பலருக்கு வேலையளித்து வந்திருக்கிறோம். இம் முன்னேற்றம் தடைபடுவதோடு, பின்நோக்கிச்செல்ல நேரிடுவது வருந்தத்தக்கதாகும்.

ஆகவே, நம் மக்கள் எல்லோரும் கதரை ஆதரித்து உற்பத்தியைப் பெருக்கத் துணைசெய்ய வேண்டுமென கேட்டுக்கொள்ளுகிறேன்.

25—9—1960

# விஞ்ஞானச் - செய்திகள்

## ஒலியால் மழை

அண்மையில் சோவியத் விஞ்ஞானிகள் ஒலியால் மழையைப் பெய்விக்கும் ஒரு புதிய முறையைக் கண்டுபிடித்துள்ளனர். பெரிய குன்றுகள் அல்லது சிறு மலைகளின் மீதிருந்து ஒலியை எழுப்பும் ராட்சச ஜெனரேட்டர்களை உபயோகித்து, 9 சதுர மீட்டர் குறுக்களவுள்ள குழாயின் வாய்களை மழை மேகங்களை நோக்கித் திருப்பிவிடப் படுகிறது. தொடர்ந்து பலமான ஒலி அலைகள் 25 கிலோ வாட் சக்தியுடன் வேகமாக மேகங்களைத் துளைக்க ஆரம்பித்தவுடன் மேகங்களிலுள்ள சிறு நீர்த் துளிகள் லேசாகச் சலனப்பட்டு ஒன்றுடன் ஒன்று உராய்ந்து ஒன்று கலந்து பெரிதாகி மழையாகப் பொழிய ஆரம்பித்தது.

## நடுகருவி

நெல்நாற்றை வரிசையாக நடுவதற்கு பெங்களூர் ஹாசன் மாவட்டத்தைச் சேர்ந்த விவசாயி ஒருவர் ஓர் எளிய முறை கண்டுபிடித்துள்ளார். அண்மையில் அது நேருஜிக்கு அறிமுகப் படுத்தப் பட்டது. கம்பி மூலம் ஒரே இடைவெளியில் இணைக்கப்பட்ட இரும்புச் சட்டங்களைக் கொண்ட அந்தக் கருவியைக் கண்டுபிடித்த விவசாயிக்கு பெங்களூரில் நடைபெற்ற விவசாய விவாத அரங்கில் முதற் பரிசு வழங்கப்பெற்றது.

## 'களையெடுப்பான்'

களையெடுக்கிறோம். ஆனால் களை முழுவதும் அகற்றப்பட்டு விடுவதில்லை. தீயின் மூலம் களை எடுப்பு வேலை நடைபெற்றால் எல்லாக் களையுமே அழிக்கப் பட்டு விடுகின்றன. களை எடுக்க அரிவாள்களுக்கு பதில் எரிவாயு பர்னர்கள் பொருத்தப் பட்ட சாகுபடி இயந்திரங்களை உபயோகிப்பதன் மூலம் இது சாத்தியமாகிறது. தீச்சுவாலைகள் களையையும் பூச்சியையும் அழித்துவிடுகின்றன. பயிர்கள் சேதமாகாமல் விசேட கேடயங்கள் பயன்படுத்தப்படுகின்றன.



## திருமணம்

குளித்தலை விவசாய விஸ்தரிப்பு அதிகாரி திரு. கை. பூமிநாதன் B. Sc., (Ag) க்கும் செல்வி செல்வாம்பாளுக்கும் 15-9-60 வியாழக்கிழமை காருகுடியில் பேராசிரியர் திரு. ஐயம்பெருமாள் கோனார் தலைமையில் திருமணம் சிறப்பாக நடந்தது. திரு. சாமி பழனியப்பன் வாழ்த்துரை வழங்கினார். கரும்பு ஆராய்ச்சித்துறை உதவியாளர் திரு. எ. கே. கதிர்வேலு அனைவரையும் வரவேற்றார். உற்றாரும் உறவினரும் வந்திருந்து மணமக்கட்கு ஏராளமான பரிசுகளையும், வாழ்த்துக்களையும் வழங்கினர். மணமக்கள் இருவரும் தமது நன்றியைத் தெரிவித்தனர்.



# வாழும் முறைமை

## - மேதை விச்வேச்வரய்யா மணிமொழிகள் -

* நாட்டு மக்கள் வேலை செய்யும் நேரத்தை அதிகரிக்க வேண்டும். வேலை செய்யும் நேரம் ஒழுங்கு முறையின்றி இருப்பதை மாற்றி தினசரி சராசரி 6 அல்லது 8 மணி நேரம் வேலை செய்யவேண்டும்.

* வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஐக்கியத்தையும் கூட்டுறவையும் ஏற்படுத்த ஒவ்வொருவரும் பாடுபடவேண்டும்.

* ஒழுங்குக் கட்டுப்பாட்டையும் விடாமுயற்சியையும் பழக்கத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

* விசுவாசம் நேர்மை சுயநலமற்ற தன்மை ஆகியவற்றை கூடுமான வரை ஞாபகப்படுத்திக் கொண்டால் ஒருவர் வாழ்க்கையில் வெற்றியை அது உதவும்.

* அன்றாட வாழ்க்கையில் மக்களுக்கு மரியாதை செலுத்த வேண்டும்; சேவைபுரிய வேண்டும்.

* ஒவ்வொரு நாட்டிலும் மக்களை வழிகாட்டிகளாகவும், பின்பற்றுவோராகவும் ஆக இரண்டாகப் பிரித்துக்கொள்ள வேண்டும்.

* ஒவ்வொருவரும் அடிப்படை அறிவு பெறும்படி செய்யவேண்டும்.

* மக்களின் மனப்போக்கைத் தெரிந்து கொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்.

* பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் நன்னடத்தை பற்றிப் போதனை செய்வதோடு, அவற்றை நடைமுறையில் கொண்டுவருவதற்கான பயிற்சியும் அளிக்க வேண்டும்.

* நேரத்தைச் சரியானபடி பயன்படுத்திக் கொள்ள வேண்டும்; ஒழுங்குபடுத்தப்பட்ட வாழ்க்கையில் நேரம்தான் பணம்.

* கடும் உழைப்பு, போதுமென்ற மன நிறைவு, திறந்த வெளி வாழ்க்கை, மனமகிழ்ச்சி இவையே நீண்ட ஆயுளின் இரகசியமாகும்.

* எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருங்கள். சிரித்த முகத்துடன் இருப்பது முதியவர்களுக்கு நல்லது.

* மனச்சாட்சிக்கு விரோதமான செயலைச் செய்யாதீர்கள். மனிதன் கிழவன் ஆவதற்கு அவனுடைய கெட்ட மனச்சாட்சியே காரணம்.

* அளவோடு சாப்பிடவேண்டும்; வயிறு நிறையச் சாப்பிடக் கூடாது. நாக்குக்குச் சுவையானது என்றாலும் அளவிற்கு அதிகமாக உண்ணக் கூடாது.

* நன்றாகத் தூங்குங்கள். நாள்தோறும் குறித்த நேரத்தில் தூங்குங்கள். இரவுத் தூக்கத்தை எக்காரணத்தாலும் கெடுக்காதீர்கள்.

* சம்பாதிக்கும் பணத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்துங்கள். வாழ்க்கை நடத்துவதற்காக என்று கடன் வாங்காதீர்கள்.

* சம்பாதிக்கும் காலத்திலேயே சேமித்து வையுங்கள்; இது சிக்கனமாக வாழ வழி செய்வதுடன் பிற்கால நலனுக்கும் உதவும்.

* வாழ்க்கையில் ஒரு குறிக்கோளை வைத்துக் கொள்ளுங்கள். மலையே அசைந்தாலும் மனம் கலங்காமல் தன்னம்பிக்கையோடு இருங்கள்.

* உங்களுக்குத் திருமணம் ஆகியிருந்தால் மனைவியை மகிழ்வோடு வைத்துக் கொள்ளுங்கள். தனியாக இருந்தால் திருமணம் செய்து கொள்ளுங்கள். தனித்த வாழ்க்கை முற்றுப் பெறுவதில்லை.

* குழந்தையுடன் கொஞ்சி விளையாடுங்கள். இதனால் புத்துணர்ச்சி ஏற்படும். உடம்புக்கும் நல்லது.

* உழைப்பிற்குத் தயங்காதீர்கள்; உடல் வியர்க்க உழையுங்கள்; உழைப்புக்குத் தகுந்த ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்.

* தோல்வி ஏற்பட்டாலும் மனச் சோர்வு இன்றி முன்னேறுங்கள்.

துணையாசிரியர் பேச்சு :

# அதிசயமா..? இதயமுண்டா..? சிந்து நதியின் மிசை...

'அதிசயம் ஆனால் உண்மை!'— இந்தத் தலைப்புடன் நாள்தோறும் செய்திகள் வெளிவந்துகொண்டே இருக்கின்றன. அண்மையில் பெண் பழனியம்மா ஆணாக மாறிய அதிசயச் செய்தியைத் தொடர்ந்து பற்பல விஷயங்கள் வெளிவருகின்றன. பத்திரிகைகளில் இது ஒரு முக்கிய செய்தியாகிவிட்டது. பெண் ஆணாக மாறிய செய்தி வேண்டுமானால் புதிதாகத் தோன்றலாமே தவிர ஆண் பெண்ணாக மாறிய அதிசயச் செய்திகள் பலவற்றை நாம் பார்த்திருக்கிறோம். அது நமக்கு ஒன்றும் புதிதல்ல. ஆணிலே பெண்ணும், பெண்ணிலே ஆணும்! அவ்வளவுதான்.

ஆனால், உலக அரசியலிலே ஓர் அதிசயம் நடந்திருக்கிறது. ரஷ்யாவும் அமெரிக்காவும் கீரியும் பாம்பும்போல ஒன்றுக்கொன்று சீறிக்கொண்டும், மோதிக்கொண்டும் உள்ளன. இது புதிய கதை ஒன்றுமல்ல. அமெரிக்கத் தலைவரும், ரஷ்யத் தலைவரும் ஒருவருக்கொருவர் வாய்க்கு வந்தபடியெல்லாம் பேசிக்கொண்டதையும் கடுமையாக —சிறுபிள்ளைத்தனமாக தாக்கிக்கொண்டதையும், [illegible] மாநாட்டு நிகழ்ச்சிகளையும், ரஷ்யாவுக்குள் ஐக்கை வரக்கூடாது என்றதையும் அமெரிக்க விமானங்களை ரஷ்யா சுட்டு வீழ்த்தியதையும் அமெரிக்காவோ-உலகமோ இன்னும் மறந்துவிடவில்லை. அப்படியேதான் ஐக்கின்சுற்றுப்பயணத்தின்போது ரஷ்யா நேரிலும் திரைமறைவிலும் நடத்திய எதிர்ப்புக்களும் மக்கள் மனத்திலிருந்து மறைந்துவிடவில்லை.

தென்துருவமும் வடதுருவமும் போல உள்ள ரஷ்யாவும் அமெரிக்காவும் எந்த நேரத்தில் மோதுமோ? போர்ப்புயல் கிளம்புமோ என்று பீதியடைந்துள்ளவர்கள் ஒருபுறம்! அவர்கள் இருவரும் மோதமாட்டார்களா? போர்ப்புயல் கிளம்பாதா என்று மனப்பால்குடித்துக்கொண்டிருக்கும் சுயநலமிகள் ஒருபுறம். இவ்வாறிருக்கையில், குருஷேவ் நியூயார்க் சேர்ந்ததாக ஒரு செய்தி பலரை ஆச்சரியத்தில் மூழ்கவைத்திருக்கிறது. குருஷேவ் நியூயார்க் சென்றடைந்ததும் சவக்குழி தோண்டும் குருஷேவ்—ரஷ்ய மக்களைக் கொல்லும் குருஷேவ் என்று எழுதப்பட்ட கொடிகளைத் தாங்கிய படகு ஒன்றும் மிதந்ததாம். என்னே! நியூயார்க் மக்களின் சுதந்திரம்! என்றுதான் எண்ணத்தோன்றும். ஆனால், எத்துணைக் கொள்கை மாற்றமும், கருத்து வேறுபாடும் இருந்தாலும் மனிதத்தன்மையை மறப்பது மக்களினத்திற்குரிய பண்பாடல்ல. எனவே, இரு வல்லரசுகளும் மனங்கலந்து பேசி, மக்களுக்கு இருக்கும் பீதியைப் போக்கி அமைதிக்கு வழிவகுப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.



'ஒரு பொருளை எப்படி எட்டத்தில் தூக்கியெறிவது என்று நான் ஒருவனுக்குத் தினமும் பாடம் சொல்லிக்கொடுத்துவந்தேன்; அவன் கற்றுத் தேறியதும் முதலாவது தூக்கியெறியப்பட்ட பொருள் நான்தான்' என்பதாக அந்நிய நாட்டுப் பழமொழி ஒன்றுண்டு. இதனையே 'வளர்த்த கடா மார்பில் பாய்ந்தது' என்று சுருக்கமாகச் சொல்லுவார்கள் நம்மவர்கள். ஏறியதும் ஏணியை எட்டி உதைக்கும் 'கெட்டிக்காரர்கள்' பலர் நம்மிடையே இருக்கத்தான் செய்கிறார்கள்,

அண்மையில், சென்னை பழைய மாம்பலம் சாரதா உயர்நிலைப்பள்ளியில் நடைபெற்ற பாரதிவிழாவிற்குத் தலைமைவகித்த மதிப்பிற்குரிய ராஜாஜி அவர்கள் ''பாரதியை இன்று எல்லோரும் அதிகமாகக்கொண்டாடுகிறார்கள்; வெள்ளையன் ஆட்சியின்கீழ் இந்தியா அடிமைப்பட்டுக் கிடந்தபோது தேசபக்திப் பாடல்கள் மிகவும் அவசியமாக இருந்தன. இன்று பாரதியாரின் தேசபக்தி பாடல்கள் தேவையில்லை'' என்று குறிப்பிட்டதாக வெளிவந்த செய்தியைப் படித்தேன். ராஜாஜி மிகச் சிறந்த அறிவாளி என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். ஆனால் காலை மரத்தில் உலர்த்திவிட்டு முதலையின் முதுகில் சவாரி செய்த கதைதான் நினைவுக்கு வருகிறது. ராஜாஜி தமது இதயத்தை எந்த மரக்கிளையில் உலர்த்தியிருக்கிறார் என்பதைத்தான் இதுவரை என்னால் கண்டுபிடிக்க முடிந்ததில்லை. அவருக்கு இதயம் என்பதே ஒன்று உண்டா என்ற அடிப்படை ஐயப்பாடேவந்திருக்கிறது! வேறென்ன சொல்வது?



'சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேரநன் னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினில் பாட்டி
[சைத்துத்
தோணிகள் ஓட்டிவிளையாடி
[வருவோம்'

என்ற மகாகவி பாரதியாரின் பாடல் வரிகள் தென்றலிலே தவழ்ந்துவந்து தேனெனப் பாய்ந்தன செவிகளிலே. சிந்தையெலாம் தோள்களெல்லாம் பூரித்தேன். ஆகா! அடுத்த நிமிடமே என் பூரிப்பு சிறகொடிந்த பறவையாக ஆகிவிட்டது. படுக்கையில் கிடக்கும்யானையைப்போல, கொல்லனின் உலைக்களத்துத் துருத்தியைப்போல ஒரு நீண்ட பெருமூச்சு விட்டேன். ஐயகோ! சிந்துநதியின் தண்ணீர்ப் பிரச்னை ஒரு மாமாங்கமாக அதாவது 12 ஆண்டுகளாகத் தீராத பிரச்னையாக அல்லவா இருந்து வருகிறது? பாரதியின் இந்த இன்பக் கனவு எப்படி நனவாகப்போகிறது என்றெல்லாம் எண்ணினேன். என்றாலும், என் உள்மனம் மட்டும் ஒரு சிறிதும் நம்பிக்கையை இழக்கவில்லை.

கண்விழித்தேன். 'சிந்து நதி நீர் ஒப்பந்த'த்தில் இந்தியத் தலைமை அமைச்சரும், பாகிஸ்தான் குடியரசுத் தலைவரும் கையெழுத்துச் செய்தனர். கராச்சியில் கையெழுத்துச் செய்யப்பட்ட இந்த ஒப்பந்தத்தின்படி சிந்துநதித் தண்ணீரில் இந்தியாவுக்கு 20 சதவீதம் கிடைக்கும்" என்ற வானொலிச் செய்தியைக் கேட்டு நான் உள்ளபடியே அதிர்ச்சியடைந்தேன். ஆம். 12 ஆண்டுகளாகத் தீராத ஒரு பிரச்னை இப்போது சுமுகமாகத் தீர்ந்திருக்கிறது என்றால் உங்களுக்குமட்டும் அதிர்ச்சி இல்லாமலா [illegible] மானால் உங்களை நீங்களே சமாளித்துக்கொள்ள அதிர்ச்சியாவது புடலங்காயாவது என்று பேசலாம்.

சகோதர நாடுகளான பாகிஸ்தானும் இந்தியாவும் சுமுக உறவு கொள்ள முடியும். இந்தியாவையும் பாகிஸ்தானையும் மோதவிட்டு, இந்தக் கிடாச் சண்டையில் இரத்தம் குடித்து மகிழத் துடித்துக்கொண்டிருக்கும் ராஜதந்திர நரிக்கண்ணர்கள் தனக்குப் பின்னால் இருந்து உசுப்பிக்காட்டிக்கொண்டிருப்பதை பாகிஸ்தான் உணர்ந்துகொள்ளுவது நல்லது.

இப்படி எனது சிந்தனை வளர்ந்துகொண்டே சென்றது. வாய் மட்டும், 'சிந்துநதியின் மிசை நிலவினிலே...' என்று முணுமுணுத்துக்கொண்டே இருந்தது.



# செய்திக் கோவை

### 'பாஞ்சாலி சபதம்'
### சேவா ஸ்டேஜினரின் கவிதை நாடகம்

சென்னை சேவா ஸ்டேஜினரும், சாயிசான சபாவினரும் சாயி கலா மண்டபத்தில் செப்டம்பர் 11-ந் தேதி மகாகவி பாரதியாருக்கு அஞ்சலி செலுத்தினர். அவ்வமயம், திரு. வெ. சாமிநாத சர்மா, நமது ஆசிரியர் திரு. திருலோக சீதாராம், திரு. பி. எஸ். ராமையா ஆகியோர் சொற்பொழிவாற்றினர். பின்னர் சேவா ஸ்டேஜினர் பாரதியின் 'பாஞ்சாலி சபத'த்தை கவிதை நாடகமாகச் சிறப்புற நடித்துக்காட்டினர்.

### மூன்றாவது திட்டத்தில் கதர், கிராமத் தொழில்

3-வது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப் பெறுவதற்காக கதர், கிராமத் தொழில் போர்டு 26·79 கோடி ரூபாய் செலவில் ஒரு திட்டத்தைத் தயாரித்துள்ளது. இத்திட்டம் அங்கீகாரம் பெறுவதற்காக காதி, கிராமத்தொழில் கமிஷனுக்கு அனுப்பப்பட்டுள்ளது. இந்த போர்டு 1959-60-ல் அமைக்கப்பட்டது. அதுமுதல் ஒதுக்கப்பட்ட 80·6 லட்சம் ரூபாயில் 70·08 லட்ச ரூபாயை போர்டு செலவழித்துள்ளது.

### பிரிட்டிஷ் ராணி சென்னை வருவார்

பிரிட்டிஷ் ராணி எலிசபெத் வருகிற டிசம்பர் மாதத்தில் இந்தியாவுக்கு வரும்போது சென்னைக்கும் வந்துசெல்வார் என்று தெரிகிறது. தென்இந்திய வர்த்தக சபையின் பொன்விழாவை முன்னிட்டு சென்னையில் நடைபெற இருக்கும் கைத்தொழில் பொருட்காட்சியை ராணியார் பார்வையிடுவார். தலைமையமைச்சர் நேரு பொருட்காட்சியைத் திறந்துவைப்பார்.







# உலகைச் சுற்றி......

### இலங்கை இந்தியர்க்குப் புதிய தலைவலி

இலங்கை அமைச்சரவையின் புதிய பட்ஜெட் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது. அதில் இலங்கையில் 'விசா'க்களின் பேரில் மூன்று மாதங்களுக்குமேல் தங்கும் அந்நியர்களுக்கு ஆண்டு ஒன்றுக்கு 400 ரூபாய் வரிவிதிப்பது என்று கூறப்பட்டுள்ளது. இந்தப் புதிய உத்தேசத்தால் பாதிக்கப்படுகிறவர்கள் இலங்கையில் உள்ள இந்தியர்களே என்றாலும், பெரும்பாலானவர்கள் தமிழர்களே என்பது தெளிவாகும்.

புதிதாகப் பதவி ஏற்றுள்ள இலங்கை அரசாங்க நிதியமைச்சர் பீலிக்ஸ் இருபத்தொன்பதே வயதான இளைஞர். எனவே அவர் இதுபற்றி மேலும் ஆழ்ந்து சிந்தித்து ஒருமுடிவுக்கு வருவது பெருந்தன்மையான செயலாக இருக்கும்.

### சீனா-நேபாள எல்லைத் தகராறு

தீராத பெருந் தலைவலியாக இருந்த நேபாள சீன எல்லைத் தகராறு கொள்கையளவில் திருப்திகரமாகத் தீர்க்கப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது. நேபாள சீன எல்லைக்கமிஷன் 7-வது தடவையாக காட்மண்டில் கூடி எல்லைத்தகராறுகள் அனைத்தின் மீதும் உடன்பாடு கண்டுள்ளது.

### மலேயாவுக்குப் புதிய மன்னர்

அண்மையில் மூன்று வாரங்களுக்குமுன் மலேயாவின் மன்னராக இருந்த சுல்தான் ஹிஸமுத்தீன் ஆலம்ஷா காலமானாரல்லவா இப்போது பெர்லின் ராஜ்யத்தைச் சேர்ந்த திரு. அதல்சையத் ஹாசன் ஜமால் உல்லாய் மலேயாவின் முடிமன்னராகப் பதவியேற்றிருக்கிறார்: இவர் ஐந்தாண்டுகள் இப்பதவியிலிருப்பாராம்.

### மலேயாவுக்குப் புதிய கப்பல் கட்டணம்

மலேயாவுக்குப் புதிய மன்னர் பொறுப்பேற்றுள்ள இந்த நேரத்தில் மலேயா போக்குவரத்துள்ள தென்னிந்தியப் பிரயாணிகளுக்கு அதிர்ச்சி தரும் செய்தியொன்று வெளியாகியிருக்கிறது. அதாவது இதுவரையிலும் இல்லாத புது முறையாக திரும்பிவருவதற்கான டிக்கட்டில் ரிபேட் முறையொன்றை கப்பல் கம்பெனி அமலாக்கியிருக்கிறது. அதுமட்டுமல்ல, மலேயாவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையேயான கப்பல் பிரயாணிகளுக்குரிய சட்டணத்தை அடுத்த மாதத்திலிருந்து அதிகமாக்குவதென்றும் கப்பல் கம்பெனிகள் தீர்மானித்துள்ளன. இந்த முடிவை எதிர்த்து, மலேயா இந்தியர் காங்கிரஸ் ஓர் அறிக்கை விடுத்திருக்கிறது. அவ்வறிக்கையில் சிங்கப்பூர் மலேயா இந்திய சர்க்கார்கள் இவ்விஷயத்தைப் பற்றி விசாரணை நடத்தவேண்டுமென்றும், இந்தக் கட்டண உயர்வு பெரும்பாலும் அடித்தளப் பிரயாணிகள் தலையிலே சுமப்பதாயுள்ளது வருந்தத் தக்கதென்றும் தெரிவித்திருக்கிறது.

### ஐ. நா. சபை

ஐ. நா. பொதுச் சபையில் கலந்துகொள்ள நியூயார்க் சென்றுள்ள சோவியத் பிரதமர் குருஷேவ் அமெரிக்காவில் சுமார் 3 மாதகாலம் தங்கியிருப்பார் என்று தெரிகிறது.

ஐ. நா. பொதுச்சபையில் இப்போது 14 நாடுகளை அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பெற்றிருக்கிறது. 14 நாடுகளில் 13 ஆப்பிரிக்க நாடுகள். இதனால் ஆசிய ஆப்பிரிக்க கோஷ்டி பலம் அதிகரித்திருக்கிறது. இப்போது ஐ. நா. வில் அங்கம் வகிக்கும் மொத்த நாடுகள் 96.

ஐ. நா. பொதுச் சபை கூட்டத்தில் கலந்துகொள்ள நேரு செய்த முடிவை ஐ. நா. சபையின் புதுத் தலைவர் திரு. போலண்ட் மகிழ்ச்சியோடு வரவேற்றிருக்கிறார்.

# சேஷசாயி நிறுவனத்தாரின் புதிய காகித ஆலை

ஈரோட்டுக்கு அருகிலுள்ள பள்ளிப்பாளையத்தில் சேஷசாயி பேப்பர் அண்டு போர்டு லிமிடெட்டின் 10கோடி ரூபாய் மூலதனத்தோடு ஆரம்பிக்கப்பெறவிருக்கும் காகித உற்பத்தி ஆலைக்கு இந்திய வர்த்தகத் தொழில் அமைச்சர் திரு. லால்பகதூர்சாஸ்திரி அடிப்படைக்கல் நாட்டினார். விழாவுக்கு முதலமைச்சர் திரு. காமராஜ் தலைமை வகித்தார். டைரக்டர் திரு. டி. எஸ். கிருஷ்ணா அனைவரையும் வரவேற்றார்.

3-வது திட்டமுடிவுக்குள் ஆண்டுக்கு 10 லட்சம் டன் லட்சியக் குறியை காகிதத் தொழில் அடைவது சாத்தியமே என்று அமைச்சர் திரு. சாஸ்திரி கூறினார். மத்திய அமைச்சர் திரு. ப. சுப்பராயன், மாநில அமைச்சர் திரு. ஆர். வி. வெங்கட்ராமன் ஆகியோர் விழாவுக்கு வந்திருந்தனர்.

# மின்சாரக்கருவி உற்பத்திச்சாலை

## மத்திய அமைச்சர் திறந்துவைத்தார்

சேஷசாயி இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட் நிறுவனத்தார் ஒருகோடி ரூபாய் செலவில் நெய்வேலிக்கு அருகிலுள்ள வடலூரில் நிறுவியுள்ள மின்விசைக் கருவி உற்பத்திச்சாலையை மத்திய கைத்தொழில் வர்த்தக அமைச்சர் திரு. லால்பகதூர்சாஸ்திரி இயக்கிவைத்தார். இந்த ஆரம்பவிழாவிற்குச் சென்னை மாநில முதலமைச்சர் திரு. காமராஜ் தலைமை வகித்தார். தொழிற்சாலையின் டைரக்டர்கள் போர்டின் தலைவர் திரு. நாராயணசாமி எல்லோரையும் வரவேற்றார்.

மத்திய அமைச்சர் திரு. சாஸ்திரி பேசுகையில், இந்த மின்விசைக் கருவித் தொழிற்சாலையைத் தொடர்ந்து இன்சுலேட்டர் தொழிற்சாலையும் துவக்கப்படவேண்டும்; அது மூன்றும் திட்டகாலத்தில் நிறைவேறும் என்று கூறினார்.

இந்தியாவில் இன்சுலேட்டர்கள் உற்பத்தி ஆண்டொன்றுக்கு 20 ஆயிரம் டன்களுக்கு அதிகமாக இல்லை என்றும், இந்தியா சுமார் 150 லட்சம் ரூபாய் மதிப்புள்ள இன்சுலேட்டர்களை இறக்குமதி செய்யவேண்டியிருக்கிறதென்றும் எனவே உள்காட்டில் இன்சுலேட்டர் உற்பத்தியைப் பெருக்கவேண்டியது அவசியமென்றும் அவர் வற்புறுத்தினார்.

### வள்ளுவன் படத் திறப்பு விழா

18—9—60-ல் வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில் சென்னை உயர்நீதிமன்ற நடுவர் திரு. கே. வீராசாமி தலைமையில் மாநில கல்வித்துறை இயக்குனரின் மகனை (மறைந்த) திருவள்ளுவன் திருவுருவப் படத்தை சென்னை மாநிலச் சட்டமன்றத் தலைவர் திரு. டாக்டர் யூ. கிருஷ்ணாராவ் திறந்துவைத்தார்.

பாடசாலையின் ஆட்சிமன்றத் தலைவரும், அமைச்சர் சபையினரும் தலைவர்களை வரவேற்றனர். பேராசிரியர் ந. சஞ்சீவி எம். ஏ. பாடசாலையின் சார்பில் வரவேற்பு வாசித்தளித்தார்.

தலைமையேற்ற உயர்நீதிமன்ற நடுவர், "பத்து வயதும் நிரம்பாத ஒருவருக்குப் படம் திறந்துவைத்தல் இது தான் முதல்தடவை என்றும், திருவள்ளுவன் ஒழுக்கத்தில் சிறந்து விளங்கினான் என்றும், நல்ல பண்புகளுடன் சிறந்திருந்தான் என்றும், பலதிறப்பட்ட பெருமக்களுடனும் நன்கு பழகும் சூழ்நிலை அவனுக்கு அமைந்திருந்தது என்றும் பாராட்டினார்.

திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் நன்றி கூறினார்.



### கைத்தறித் தொழிலுக்கு மத்திய அரசாங்க உதவி

மத்திய அமைச்சர் உறுதி

சென்னை மாநிலத்தில் பெருந்தொழிலாக கைத்தறி அமைந்துள்ளதென்றும், அதற்குரியசகல உதவிகளையும் சாத்தியமான அளவிற்கு மத்தியஅரசாங்கம் அளிக்குமென்று தாம் உறுதிகூறுவதாயும் பள்ளிப்பாளையத்தில் மத்திய மந்திரி திரு. லால்பகதூர் சாஸ்திரி தெரிவித்தார்.

### பாதை புதுப்பிக்கும் விழா

கரூர் உதவி கலெக்டர் திரு. பாங்கோ, குளித்தலை தாலுகா பின்னபாளையம் கிராமத்திலிருந்து வீரகுமரன்பட்டிக்கு செல்லும் பாதை புதிப்பிக்கும் விழாவில், மண் வெட்டிப் போடும் வேலையைத் துவக்கிவைத்தார். மண்வெட்டி கொண்டு அவர் மண்ணை வெட்டிப் போட்டதும் கிராம மக்கள் விரைந்து பணியில் ஈடுபட்டார்கள்.

சிவாஜி

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

[ஏடு 25] 25—9—1960 [வாரம் 47

# முன் வருக

நமது மாநில அரசாங்கத்தின் சாதனைகளை ஏனைய மாநிலத் தலைவர்களும், பிறநாட்டினரும்கூடப் புகழ்கிறார்கள்; அந்தப் புகழுரைகளைக்கேட்டு உள்ளபடியே நாம் மகிழ்ந்து பூரிப்படைகிறோம். அண்மையில், ''தொழிற்பேட்டைகள் ஏற்படுத்துவதில் சென்னையைவிட வேறு எந்த மாநிலமும் சிறந்த முறையில் செயலாற்றவில்லை'' என்று மத்திய அமைச்சர் திரு. மனுபாய் ஷா பாராட்டியிருக்கிறார். பொதுவாக, இந்தப் பாராட்டுரையைக் கேட்டு நாம் பூரிப்படைவது நியாயமே என்றாலும், நமது மாவட்டத்தை எண்ணிப்பார்க்கும்போது வருந்தவேண்டியதாகத்தான் இருக்கிறது. ஆம்.பிற்பட்ட மாவட்டங்களின் வரிசையில்தான் நாம் இருக்கிறோம்.

புதிய தொழில்களை ஆரம்பிக்க வசதிபடைத்த பெருமக்கள் நமது மாவட்டத்தில் பலர் இருக்கிறார்கள்; நமது மாவட்ட கலெக்டர் குலாப் முகமது பாட்சா அவர்களும், பிற்பட்ட மாவட்டப் பட்டியலிலிருந்து பிரிந்து தொழில் வளமுள்ள ஒரு மாவட்டமாக இதனை ஆக்கிவிடவேண்டும் என்ற கருத்தில் பெருமுயற்சி செய்துவருகிறார் என்றாலும் உருப்படியான பலன் இனிமேல்தான் கிடைக்கவேண்டும் என்பதை மறுப்பதற்கில்லை.

ஏறத்தாழ இரண்டுமாதங்களுக்கு முன்பு நமது மாநில மின்சார அமைச்சர் வி. இராமையா அவர்கள் நமது மாவட்டத்தின் பிற்போக்கு நிலையைச் சுட்டிக்காட்டிச் சிறு தொழில்கள் நடத்த விரும்புவோர் உற்சாகத்துடன் முன்வர வேண்டும் என்று அன்பழைப்பு விடுத்து, அவர்களுக்கு வேண்டிய உதவிகளை அரசாங்கம் தயங்காமல் கொடுக்கும் என்று உறுதியும் கூறினார். அந்த அன்பழைப்பாலும் உறுதியாலும் விளைகிற பயனை நாம் எதிர்காலத்தில்தான் காணவேண்டும்.

நமது மாநிலத்தின் தொழில் ஊக்கத்தையும், முன்னேற்றத்தையும் பாராட்டிய மத்திய அமைச்சர் மனுபாய் ஷா, மூன்றாவது திட்டத்தின்படி நாட்டில் பிற்போக்கு நிலைமையிலுள்ள மாவட்டங்களில் தனியார் துறையில் தொழிற்பேட்டைகள் நிறுவ சிறிய தொழில்நிலையங்களுக்குப் பல உதவிகள் கிடைக்கும் என்று குறிப்பிட்டிருக்கிறார். அடிமேல் அடி அடித்தாற்போல, மத்திய அரசும், மாநில அரசும் உதவிகள் வழங்குவதாகத் திரும்பத் திரும்ப வற்புறுத்திக் கூறுகிறார்கள். இந்நிலையிலும், நமது மாவட்டத்தில் வசதியுடைய தொழில் அதிபர்கள் முன்வந்து வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளாமல் காலதாமதம் செய்வார்களானால், அது அவர்களுக்கும் நஷ்டம்; நமது திருச்சி மாவட்டத்திற்கும் பெரியதோர் இழப்பாகும் என்று குறிப்பிட விரும்புகிறோம்.

# இந்திய கைத்தறித் துணிக்கு சிங்கை மலேயாவில் கிராக்கி

திரு. எம். பி. நாச்சிமுத்து தகவல்

பிளீடிங் மதராஸ் போன்ற கைத்தறித் துணி வகைகளுக்கு தூர கிழக்கு நாடுகளில் விற்பனை வாய்ப்புத் தேடுவதற்காக சென்னை மாநில கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத் தலைவர் திரு. எம். பி. நாச்சிமுத்து தலைமையில் ஒரு தூதுக்குழு சுற்றுப் பயணம் செய்வது தெரிந்ததே.

அண்மையில் மேற்படி தூதுக்குழு சிங்கப்பூர் மலேயா நாடுகளில் சுற்றுப் பயணம் செய்தது. அது பற்றி தலைவர் திரு. நாச்சிமுத்து குறிப்பிடுகையில்,

''சிங்கப்பூர் மலேயா நாடுகளில் இந்திய கைத்தறி மார்க்கெட் தொடர்ந்து நல்ல நிலைமையில் இருந்து வருகிறது; அதிகப்படி பிரசாரம் தொடர்ந்து நடத்தினால் இந்த நாடுகளில் இந்திய கைத்தறித் துணி விற்பனையை கணிசமான அளவிற்கு மேலும் அதிகரிக்க இயலும்'' என்று கூறியிருக்கிறார். மேலும் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:

''மலேயா சிங்கப்பூரில் இந்திய கைத்தறி மார்க்கெட் பல தலைமுறைகளாக இருந்து வருகிறது; தொடர்ந்து நல்ல நிலைமையில் இருந்து வருகிறது''

மேற்படி தூதுக்குழு சிங்கப்பூர் மலேயா சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு சைகோனுக்குப் புறப்பட்டுச் சென்றது.

★

# ஒலவக்கோடு தமிழ்ச் சங்கம்

ஒலவக்கோடு தமிழ்ச் சங்கம் 11—9—60ல் பாரதிவிழாவைக் கொண்டாடியது. விழாவிற்கு சேலம் திரு. பி. சி. சீதாபதி தலைமை வகித்தார். செல்விகள் சுபத்திராவும் விஜயாவும் இறை வணக்கம் பாடியபின்னர் சங்கச் செயலாளர் வரவேற்புரை வழங்கினார்.

அவ்வமயம், கோவை—பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரிப்பேராசிரியர் தவத்திரு இராமசாமி அடிகளார் பண்டைத் தமிழரின் நாகரிகம், இலக்கணம், இலக்கியம், வாழ்க்கை முறை முதலியன பற்றி விளக்கிக் கூறி, அவற்றை எவ்வாறு பின்பற்றியும், பெருமை கொடுத்தும் பாரதியார் தம் கவிதைகளை இயற்றினார் என்றும், அவர் கவிதைகளில் நாம் காணும் நயங்கள், கடைப்பிடிக்கவேண்டிய வாழ்க்கை முறை, அன்பின் உச்சநிலை, தெய்வ வழிபாடு, சுதந்திர உணர்ச்சி முதலாய நற்பொருள்களை நயம்பட, தூய, எளிய, இனிய தமிழில் திருக்குறள், தொல்காப்பியம் போன்ற பழம்பெரும் நூல்களினின்று மேற்கோள்களுடன் கேட்போர் மனத்தே பதியும்படி எடுத்துரைத்தார்.

பாரதியாரின் கவிதைகளை இன்றையச் சூழ்நிலையில் இலக்கியக் கண்கொண்டு ஆய்ந்து அவ்விலக்கியம் காட்டும் வாழ்க்கை இலக்கணத்தைக் கடைப்பிடித்து உலகியலில் நடந்துவந்தால்தான் மனிதன் இதய சுதந்திரத்தை அடையலாம் என்று குறிப்பிட்டார்.

சங்கச் செயலாளர் நன்றிகூற, நாட்டுவாழ்த்துடன் விழா இனிது முடிவுற்றது.

★




## பஞ்சாயத்து வளர்ச்சி வாரம்

பஞ்சாயத்து அபிவிருத்தி வார விழாவையொட்டி திருச்சி மாவட்ட பஞ்சாயத்துத் தலைவர்கள் மாநாடு இன்று (25–9–60 ஞாயிற்றுக்கிழமை) காலை 10 மணிக்கு திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர் (கலெக்டர்) அலுவலகத்தில் நடைபெறுகிறது. இம்மாநாட்டை மின்சாரத்துறையமைச்சர் திரு. வி. ராமையா ஆரம்பித்துவைக்கிறார்.

காலை 8 மணிக்கு திருச்சி மெயின்கார்டுகேட்டிலிருந்து ஊர்வலம் கிளம்பி தில்லைநகர் வழியாக கலெக்டர் அலுவலகத்திற்கு வந்து சேரும். அமைச்சர் வி. ராமய்யா விழாவை ஆரம்பித்து வைத்துப் பொருட் காட்சியையும் திறந்து வைக்கிறார். மாலையில் கலைநிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

## நகரசபைக் கூட்டம்

திருச்சி நகரசபைக் கூட்டம் அதன் துணைத் தலைவர் திரு. வி. வி. எல். பி. பெரியசாமி செட்டியார் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் பெரோஸ் காந்தியின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் அவசரத் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றி அங்கத்தினர்கள் அனைவரும் மரியாதை செலுத்தினர். விச்வேச்வரய்யாவின் நூறுவது பிறந்த தினத்தையொட்டி அவரைப் பாராட்டி வேறொரு தீர்மானம் நிறைவேற்றி தீர்மானத்தைத் தந்தி மூலம் அறிவித்தனர்.

## கஸ்தூரிபா அனாதை விடுதி

ஸ்ரீரங்கம் கஸ்தூரிபா அனாதை மகளிர் விடுதியை பெரியார் ஈ. வே. ராமசாமி பார்வையிட்டார். விடுதி நிர்வாகி திருமதி எஸ். சாந்தாபாய் பெரியாரை வரவேற்று விடுதியைச் சுற்றிக் காட்டினார். விடுதியின் சார்பில் டாக்டர் வி. கே. ரங்கநாதன் பெரியாருக்கு மாலைபோட்டு வரவேற்புப் பத்திரம் ஒன்றைப் படித்தளித்தார். விடுதிக்குக் கட்டிடம் கட்ட திருவானைக்கோயிலில் நிலம் கொடுத்திருக்கிறார்கள். அதில் ஒரு கட்டிடம் கட்டிக் கொடுத்து உதவுங்கள் என்று கேட்கப்பட்டது.

பெரியார் தமக்களித்த வரவேற்புக்கு பதில் கூறுகையில், விடுதியின் சேவையைப் பாராட்டி விட்டு, நாட்டுக்கு இத்தகைய விடுதிகள் ஏராளமாகத் தேவை என்றும், அரசாங்கம் இதற்கு வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டும் என்றும் கூறிவிட்டு, விடுதிக் கட்டிடத்திற்கு என்னாலான பண உதவியைச் செய்கிறேன் என்று உறுதிகூறினார்.

## மாவட்ட தமிழாசிரியர் கழகம்

திருச்சி மாவட்ட தமிழாசிரியர் கழகத்தின் சார்பில் திருச்சி தேசீய உயர்நிலைப்பள்ளியில் பாரதி விழா கொண்டாடப் பெற்றது. ராஜேந்திரா கல்லூரித் தலைவர் திரு. டி. என். ராஜேந்திரன் விழாவுக்குத் தலைமை வகித்தார். பேராசிரியர் சி. நயினார் முகம்மது, புலவர் வீ. இளங்கண்ணனார், வித்துவான் வி. துரைசாமி ஆகியோர் பாரதி பாடல் சிறப்பை விளக்கினார்கள். திரு. எஸ். சுப்பையன் நன்றி கூறினார்.

## ஸ்ரீரங்கம் கோயிலில் மத்திய அமைச்சர்

மத்திய அரசாங்க உதவி நிதியமைச்சர் திருமதி தாரகேஸ்வரி சேலத்திலிருந்து திருச்சிக்கு வந்து ஸ்ரீரங்கம் கோயிலுக்குச் சென்று பார்வையிட்டார். அமைச்சருடன் அகில இந்திய சேமிப்புத் திட்டத் தலைமை அதிகாரி, சென்னை பிராந்திய அதிகாரி ஆகியோரும் வந்திருந்தனர். எல்லோரையும், அதிகாரிகளும், ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாகிகளும் வரவேற்றனர்.

## சர்வோதய இலக்கிய பாரதி வார விழா

சர்வோதய இலக்கிய பாரதி வார விழாவை தென்னூர் இந்தி பிரச்சார சபாவினர் 12–9–60 முதல் 18–9–60 வரை சிறப்பாகக் கொண்டாடினர்.

12–9–60 ல் நகர காங்கிரஸ் கமிட்டித் தலைவர் டாக்டர் திரு. வி. கே. ரங்கநாதன் பாரதி நூல்கள் கண்காட்சியைத் திறந்து வைத்து விழாவிற்குத் தலைமை வகித்தார். அமைப்பாளர் திரு. வி. திருநாவுக்கரசு பி. ஏ., அனைவரையும் வரவேற்றார். பாரதியாரின் சிறப்புப் பற்றி பேராசிரியர் திரு. ரம்போலா மஸ்கரனேஸ், திரு. எஸ். எஸ். பரமசிவம் ஆகியோர் பேசினர்.

இரண்டாம்நாள் விழா ஜமால் முகம்மது கல்லூரிப் பேராசிரியர் திரு. சீனிவாச சர்மா எம். ஏ., தலைமையில் நடைபெற்றது. கீதையும், பாரதியும் என்பது பற்றி திரு. வி. சீதாராமன் பேசினார். மூன்றும் நாள் பாரதியும் சர்வோதயமும் பற்றிய கட்டுரைப்போட்டி நடைபெற்றது. நான்காம் நாள் விழா திரு. கே. என். ரெங்கரெத்தின சாஸ்திரி தலைமையில் நடைபெற்றது. பாரதியும் சர்வோதயமும் என்பது பற்றி தவத்திரு குன்றக்குடி அடிகளாரும், திரு. மா. மீனாட்சி சுந்தரமும் சொற்பொழிவாற்றினர்.

ஐந்தாம் நாள் கூட்டத்திற்கு திரு. கே. என். ரெங்கரத்தின சாஸ்திரி (தலைவர், காந்தி மன்றம். முன்னாள் மாவட்ட கல்வி அதிகாரி) தலைமை வகித்தார். திரு. வி. திருநாவுக்கரசு, பி.ஏ. கட்டடத்திற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார். திரு. மா. மீனாட்சிசுந்தரம், பி.ஏ.,பி. எல்., திரு. டி. சீதாராமன், பி. ஏ., திரு. சந்திரமௌலி, எம். ஏ. தவத்திரு குன்றக்குடி அடிகளார் ஆகியோர் "பாரதியும் சர்வோதயமும்" பற்றி பேசினார்கள்.

ஆறுவதுநாள் பாரதி–பாரதேந்து விழா ஹிந்தி பிரசார சபையில் திரு. எல். மகாலிங்கம் பி. ஏ., தலைமையில் நடைபெற்றது. திரு. சுமதீந்திரன் (விஷாரத் வித்யாலய முதல்வர்) அனைவரையும் வரவேற்றார். தேசீயக் கல்லூரிப் பேராசிரியர் திரு. டி. ராமகிருஷ்ணன், எம். ஏ., "பாரதியும் பாரதேந்துவும்" என்ற பொருள்பற்றி பேசினார்.

சர்வோதய இலக்கிய, பாரதி பாரதேந்து வாரஇறுதிநாள் விழாவிற்கு திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவரும், 'எழுத்தாளன்

(அடுத்த பக்கம் பார்க்க)

(முன் பக்கத் தொடர்ச்சி)

ஆசிரியருமான திரு. அ. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமை வகித்தார். திரு. நரசிம்மன் கூட்டத்திற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார். திரு. விவேகானந்த சுவாமி பாரதி பாடல்களை பாடிக்காட்டினார். மேலும் அவர் "பாரதியின் பழமையும் புதுமையும்" என்பது பற்றி சொற்பொழிவாற்றினார். திரு. சந்திரமௌலி, எம். ஏ., பேசியபின், திரு. விவேகானந்த சுவாமிக்கு கதர் சால்வை போர்த்தி கௌரவிக்கப்பட்டது. பாட்டு, கட்டுரை, பேச்சுப் போட்டிகளில் வெற்றி பெற்ற கல்லூரி, உயர்நிலைப்பள்ளி மாணவ, மாணவிகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன. ஹிந்தி பிரசார சபா மாணவிகள் பாரதி பாடல்களைப் பாடினார்கள். திரு. வி. திருநாவுக்கரசு, பி. ஏ., நன்றி கூறினார். சர்வோதய இலக்கிய பாரதி விழா இனிது நிறைவெய்தியது.



## லயன்ஸ் கிளப்

திருச்சி லயன்ஸ் கிளப் கூட்டம் தலைவர் டாக்டர் திரு. இ. பி. மதுரம் தலைமையில் நடைபெற்றது. தரங்கம்பாடி பிஷப் ரெவரண்ட் ஆர். பி. மாணிக்கம், இந்தோனேஷிய முன்னாள் மந்திரி ரெவ. டி. எஸ். சிடாம்பௌலை அறிமுகப் படுத்தி வைத்தார். இந்தோனேஷிய அரசாங்கம் மதக் கல்வியை ஊக்குவிப்பதாயும் மானியமளிப்பதாயும் முன்னாள் அமைச்சர் கூறினார். செயலாளர் திரு. கண்ணன் நன்றி கூறினார்.

## பிலிப் பள்ளி ஆண்டு விழா

திருச்சி புதூரிலுள்ள பிலிப் பள்ளியின் 4-வது ஆண்டுவிழா நகரசபைத் தலைவர் திரு. ஏ. எஸ். ஜி. லூர்துசாமி தலைமையில் நடைபெற்றது. ஆண்டறிக்கையை தலைமையாசிரியை திருமதி. தியாகராஜன் படித்தார். பள்ளிக்கு மின்சார வசதி செய்து தந்த திருமதி அகிலாராமன் மின்சார விளக்கை ஏற்றிவைத்தார். பள்ளியின் செயலர் திரு. ஜோசப் ஞானதிக்கம் அனைவரையும் வரவேற்றார். டாக்டர் திரு. ராகவன் நன்றிகூறினார்.

## த. நா. ஹோமியோபதி சங்க மாநாடு

தமிழ்நாடு ஹோமியோபதி வைத்திய மாநாடு ஹைதராபாத் ஹோமியோபதி டாக்டர் ஜயசூர்யா தலைமையில் நடைபெற்றது. பிரதிநிதிகளை டாக்டர் டி. ஏ. பி. சார் வரவேற்றார். டாக்டர்கள் இ. பி. மதுரம் எம். எல், ஏ., எஸ். சீனிவாசன் இருவரும் ஹானிமன், ஸ்கல்சர் ஆகியோரின் படங்களைத் திறந்துவைத்தனர். கலெக்டர் திரு. குலாம்முகமது பாட்சா மாநாட்டைத் துவக்கி வைத்தார்.

அவ்வமயம், மத்திய-மாநில அரசாங்கங்கள் தமிழ்நாடு ஹோமியோபதி மருத்துவ சங்கத்தினரால் நடத்தப்படுகிற இலவச மருந்துச்சாலை, ஆஸ்பத்திரிகளுக்கு தாராளமாக மானியம் வழங்க வேண்டுமென்றும் ஏற்றுமதி இறக்குமதிக் கட்டுப்பாடு, மதுவிலக்கு ஆகியவற்றிலிருந்து ஹோமியோபதி மருந்துகளுக்கு விலக்களிக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

## திருமுறை விழா

திருச்சி மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் பன்னிரு திருமுறை மன்றத்தின் சார்பில் திருமுறை விழா ஆறு நாட்களாக நடைபெற்றது. சென்னை அறநிலையத்துறை அதிகாரி திரு. அ. உத்தண்டராமபிள்ளை தலைமை வகித்தார். திருவாளர்கள் பொன் முருகையன் எஸ். கே. ராமராசன், கு. சுந்தரமூர்த்தி, எம். ராமசாமி ஆகியோர் பேசினர். திரு. டி. எம். விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள் திருமுறைப் பாராயணம் நடத்தினார்கள். திரு. பரமன் செட்டியார் நன்றி கூறினார்.

## சண்டையிட்டாலும் ....

இந்தியா பாகிஸ்தானுக்கிடையே எத்தகைய சிக்கல்கள் இருந்தபோதிலும் இருநாடுகளின் உறவும் பிரிக்கமுடியாதது; இரு சகோதரர்கள் சண்டையிடலாம்; இருந்தபோதிலும் அவர்களிடையே அன்பு மாறுது; மறையாது.

— நேருஜி

## மாவட்ட ரயத்துவாரி பட்டதாரி கூட்டவை

திருச்சி மாவட்ட ரயத்துவாரி பட்டாதாரிகள் குடியானவர்கள் கூட்டவையின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் பிக்ஷாண்டார்கோவில் ஆனந்த விலாசத்தில் திரு. என். ராமசாமி அய்யர் தலைமையில் நடைபெற்றது.



## கோழிநோய் ஒழிப்பு ஆராய்ச்சி நிலையம்

கோழி இனத்தைப் பாதிக்கும் ஒரு பயங்கர நோய் ரானிகேட். இந்நோய்க்கு கோழிகள் பலியாவதைத் தடுப்பதற்கான அருமையான மருந்து இஸ்சத் நகரில் உள்ள இந்திய மிருக வைத்திய ஆராய்ச்சி நிலையத்தில் கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. இந்த மருந்தை ஒரு முறை கோழிக்குச் செலுத்தினால் ஆயுள் முழுவதும் அந்நோய் வருவதில்லையாம். மேற்படி ஆராய்ச்சி நிலையத்தில் நோய்த் தடுப்பு மருந்து செலுத்தப்படும் கோழிகளைப் படத்திலே பாருங்கள்.



# கோர்ட் விளம்பரங்கள்

## அரியலூர் டி. மு. கோ.
O. S. 523 | 58; E. A. 1324 | 60

ராமச்சந்திர நாயுடு —வாதி
கிருஷ்ணமூர்த்தி ஐயர் வகையரு —பிரதிவாதிகள்

ஷெ நெம்பரில் பிரதிவாதிகளின் ஈட்டுச்சொத்துக்களை ஏலத்திற்கு கொண்டுவர வாதி நிறைவேற்று மனு கொடுத்து ஷெ மனுவில் ஒட்டி சார்வுக்கு உத்திரவாகி ஏல இஸ்தியாரை நிர்ணயம்செய்ய 3-10-60 தேதியில் ஈரங்கி. ஆக்ஷேபனையை தெரிவித்துக்கொள்ளலாம்.

R. சுப்பிரமணியம்
வக்கீல்

1 | 3819 | 120

## மாயூரம் டி. மு. கோர்ட்
S. C. 258 | 1960

எண்ணகுடி P. சீனுவாசபிள்ளை —வாதி
மாணிக்க செட்டியார் —பிரதிவாதி

ஷெ நெம்பரில் வாதியால் 30-5-57-ம் தேதி புரோநோட்டுப்படி ரூ. 53-44 கிடைக்க பிரதிவாதிபேரில் தாவா செய்யப்பட்டு 5—10—60ல் ஈரங்கி போடப்பட்டுள்ளது.

N. வெங்கட்டரமணையர்
அட்வகேட்

2 | 3820 | 121

## புதுக்கோட்டை டி. மு. கோர்ட்டு
O. S. 268 | 60

அழகிரிசாமிநாயுடு மகன் K.A. ரெங்கசாமி நாயுடு —வாதி
மதுரை ஜில்லா கருப்பட்டி, அழகிரிசாமி நாயுடு மகன் வெங்கடகிருஷ்ண நாயுடு —2-ம் பிரதிவாதி

பாகப் பிரிவினைக்கும், ஸ்வாதீனம் வகையறுவுக்கும் வாதி தொடர்ந்திருக்கும் மேலே கண்ட தாவாவுக்கு 5-10-60-ல் டயம் ஏற்பட்டிருப்பதால் ஆக்ஷேபனையை அன்று தெரிவித்துக்கொள்ளலாம்.

D. நடராஜன்
அட்வகேட்

3 | 3821 | 122

## பரமக்குடி டி.மு.கோர்ட்
S. C. 141 of 1960

கட்டேரும்பெருமாள் நாடார் —வாதி
பணையூர் கிராமத்திலிருக்கும் வேலாண்டிநாடார் மகன் சண்முகநாடார் —2-ம் பிரதிவாதி

வாதி புரோநோட்டுப்படி பிராது செய்து 15-10-60-ல் வாய்தா ஏற்பட்டிருக்கிறது.

R. அனந்தநாராயண பிள்ளை
வாதி அட்வகேட்

4 | 3822 | 123

## விருத்தாசலம் டி. மு. கோர்ட்
S. C. 1057 | 60

விருத்தாசலம் தாலுகா மேமாத்தூர் கிராமம் நடராஜ உடையார் சம்சாரம் சிவபாக்யம்மாள் —வாதி
ஷெ கிராமம் நாராணி மகன் தருமன் —பிரதிவாதி

ஷெ நெம்பரில் வாதிக்கு பிரதிவாதியால் புரோநோட்டுப்படி ரூ. 87-37 கிடைக்க வாதி தாவா செய்து 13—10—60ல் ஈரங்கி வைக்கப்பட்டுள்ளது. ஆக்ஷேபனையை தெரிவிக்கத் தவறினால் ஒருதலைப்பக்ஷமாக தீர்ப்பு செய்யப்படும்.

V. ஸ்ரீநிவாசாச்சாரியார்
அட்வகேட்

5 | 3823 | 124

## விருத்தாசலம் டி. மு. கோர்ட்
O. P. 38 | 60

சிதம்பரம் தாலுகா வலசக்காடு கிராமம் ராமரெங்கம் படையாச்சி 2-வது சம்சாரம் அலமேலம்மாள் —மனுதாரி

ஷெ ராமரெங்கம் படையாச்சி இறந்ததால் ஷெயாருக்கு வரவேண்டிய கடன்களை மனுதாரியும் ஷெ ராமரெங்கம் படயாச்சியின் மூத்த சம்சாரமான தைலம்மையும் வசூலித்தடைய வார்சு சர்டிபிகேட் கோரி மனுதாரி மனு கொடுத்து 28—10—60ல் ஈரங்கி போடப்பட்டுள்ளது. ஆக்ஷேபனையைத் தெரிவிக்கலாம்.

V. ஸ்ரீநிவாசாச்சாரியார்
அட்வகேட்

6 | 3824 | 125

## படித்தோம் – – சொல்லுகிறோம்

# நீ சிரித்தால்...?

(ஆசிரியர் மு. உலகநாதன், விற்பனையுரிமை: முத்தமிழ் பாரி பதிப்பகம் 58|3 பெல்ஸ் ரோடு, சென்னை-5. விலை 80 புதுக்காசு)

புலவர், வித்துவான் மு. உலகநாதன் எழுதிய 26 பாடல்களின் தொகுப்பு. இடையே வரும் நீசிரித்தால் என்ற சிந்துப்பாடலின் தலைப்பே நூலின் தலைப்பாகத் திகழ்கிறது. சிந்து, எண்சீர் விருத்தம், அறுசீர் விருத்தம், தரவு கொச்சகம் என்ற பாவினங்களில் பாடல்கள் உள்ளன. அகத்துறை இலக்கியங்களின் கருத்துச் சாயல் ஆங்காங்கே மின்னுகின்றன.

பார்புகழும் தென்னவரின் படைக்களத்து வேலிலும், பல்லோரும் தொழுதேத்தும் வள்ளுவனார் நூலிலும் போர் மறவரின் பூரித்த தோள்களிலும் கவிஞர் அழகைக்காண்கிறார். 'தேரோசை கேட்குதடி' என்பது பிரிந்து சென்ற தலைவனை வாயில் மறுக்கும் தலைவியின் குரலாக, ஒலிக்கிறது. 'கைச் சரசம் என்றதலால் கைச்ச ரசம் என்றேனோ?' என்ற தனிப்பாடலை நினைவுறுத்துகிறது 'உள்ளங்கைத் தேனோ?' என்ற பாடல். அதில், "மண்ணதனை மருவுதலால் மரங்களென்றார்; மங்கையர்க்குப் பெண்டிரெனச் சொன்ன சொல்லும் பெண்ணியல்பாம் 'பேணல்' எனும் பெருமையால்தான்" என்ற வரிகள் கவிஞரின் சொல்லாராய்ச்சிப் புலமையை உணர்த்துகின்றன.

சந்திப் பிழைகளும், அச்சுப் பிழைகளும் மலிந்து காணப்படுகின்றன. மறுபதிப்பில் திருத்தப் பெறும் என்று நம்புகிறோம்.




# அமைச்சர்கள் சுற்றுப் பயணத்தின் அவசியமென்ன ?

## அமைச்சர் கக்கன் விளக்கம்

மாநில அமைச்சர் திரு. கக்கன் தமது திருச்சி மாவட்டச் சுற்றுப் பயணத்தின்போது, திருச்சியை அடுத்த அரசங்குடி கிராமத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டம் ஒன்றில் பேசும்போது, "மக்களுக்கு இப்போது தேவைகள் அதிகரித்து வருகின்றன; வெள்ளைக்காரன் காலத்தில் இருந்தே மக்கள் குறை தீராமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்; மக்கள் குறைகளை நேரில் கேட்டுத் தெரிந்து கொள்வதற்காகத்தான் நாங்கள் சுற்றுப் பயணம் செய்கிறோம்" என்று குறிப்பிட்டார்.

இந்தப் பொதுக் கூட்டத்திற்கு திரு. நடராஜ் நாடார் தலைமை வகித்தார்.

அடுத்து வேங்கூர் கிராமத்தில் திரு. ஆர். கணேசதேவர் தலைமையில் குடிதண்ணீர்த் தேக்கத் தொட்டி ஒன்றை அமைச்சர் திறந்துவைத்தார்.

நடராஜபுரத்தில் புதிதாகக் கட்டப் பெற்றுள்ள மாவட்ட மன்ற ஆரம்பப் பள்ளிக்கூடக் கட்டிடத்தை அமைச்சர் திறந்து வைத்தார். பஞ்சாயத்து போர்டு சார்பில் அவருக்கு ஒரு சந்தன விசிறி பரிசளிக்கப்பட்டது. அதை அவர் அந்தப்பள்ளிக்கூடத்துக்கே அன்பளிப்பாக வழங்கினார்.

### மின்சாரத் திருட்டு

திருச்சி மாவட்டம் திருக்கையூரில் அளவு யந்திரத்திற்கு (மீட்டர்) சம்பந்தமில்லாமல் மின்சாரத்தைத் திருடிப் பயன்படுத்தியதாக ஒருவரைக் கைது செய்து அவர் மீது போடப்பட்ட வழக்கில் எதிரிக்கு 100 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது.

### பஞ்சப்பட்டி இளைஞர் காங்கிரஸ்

குளித்தலையை அடுத்த பஞ்சபட்டியில் இளைஞர் காங்கிரஸ் சமிட்டியின் முதலாவதாண்டு விழாவில் மின்சார அமைச்சர் திரு. வி. ராமய்யா கலந்து கொண்டார். கூட்டத்திற்கு திரு. சே. எ. தர்மலிங்கம் தலைமை வகித்தார். சட்டசபை அங்கத்தினர் திரு. சின்னையா கவுண்டர் கொடியேற்றினார்.

அமைச்சர் பேசுகையில், 'வெள்ளையன் காலத்தில் நாங்கள் சுதந்திரப் போராட்டம் நடத்தினோம்; நாடகம் ஆடிச் சுதந்திரம் பெறமுடியும் என்று நாங்கள் நினைக்கவில்லை. போராடினோம்; சிறையில் வதங்கினோம்; பல தியாகங்கள் புரிந்து சுதந்திரம் பெற்றோம்' என்று குறிப்பிட்டார்.



### என். ஜி. ஓ. சங்க கட்டிட நிதி

திருச்சி என். ஜி. ஓ. சங்க கட்டிட நிதிக்காக குளித்தலையில் திரு. சந்திரசேகரன் எம். எல்.ஏ. யின் மகள் குமாரி கலையரசி நடனமாடினார். திருச்சி என்.ஜி.ஓ. வின் தலைவர் திரு. டி. அருணாசலம் தலைமை வகித்தார். குளித்தலை கிளையின் துணைத் தலைவர் திரு. எம். தங்கவேலு அனைவரையும் வரவேற்றார். குமாரி கலையரசிக்கு ஒரு வெள்ளிக் கோப்பை பரிசளிக்கப்பட்டது. திரு. எம். முத்தையா நன்றி கூறினார்.

### திருச்சி மாவட்டத்தில் செயற்கை மழை

விஞ்ஞான தொழிலியல் ஆராய்ச்சி சபையின் பூரண நிதி உதவியுடன் செயற்கை மழைப் பரிசோதனைகளை திருச்சி மாவட்டத்தில் நடத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

### நங்கவரத்தில் ஜகத்குரு

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள் தற்போது நங்கவரம் கிராமத்தில் தங்கியிருக்கிறார்கள். சின்னப் பண்ணை திரு. ராமநாத அய்யர் எல்லா ஏற்பாடுகளையும் செய்து வருகிறார்.

### மருதையாற்று நீர்த் தேக்கம்

மருதையாற்றில் நீர்த்தேக்கம் ஒன்றைக்கட்ட மாநில நீர்ப்பாசன இலாகா தீர்மானித்துள்ளது. மருதையாற்றின் நீரையும், கீழ் அணைக்கட்டில் வீணாகும் கொள்ளிடத்தின் உபரித் தண்ணீரையும் உபயோகித்துக்கொள்ள இத்திட்டத்தில் வகைசெய்யப்பட்டுள்ளது. கடம்பூருக்கு அருகே மருதையாற்றின்மீது நீர்த்தேக்கம் கட்டப்படும். இதன்மூலம் மருதையாற்றுப் பாலம் சேதமடையாமல் பாதுகாக்கப்படலாம்.

பாப்பாப் பாட்டு :

## உனக்குச் சோத்து!

ஒன்றும் ஒன்றும் இரண்டு
உளரா தவர்கள் மண்டு
இரண்டும் ஒன்றும் மூன்று
இனிய முகத்தொடு தோன்று
மூன்றும் ஒன்றும் நான்கு
மீனில் ஒருவகை விலாங்கு
நான்கும் ஒன்றும் ஐந்து
நன்றாய் உருளும் பந்து
ஐந்தும் ஒன்றும் ஆறு
அரிசியை வடித்தால் சோறு
ஆறும் ஒன்றும் ஏழு
அனைவரும் போற்ற வாழு
ஏழும் ஒன்றும் எட்டு
இனிக்கும் உருண்டை லட்டு
எட்டும் ஒன்றும் ஒன்பது
இனிப்பு விரும்பித் தின்பது
ஒன்பதும் ஒன்றும் பத்து
உனக்குப் படிப்பே சொத்து!

# ஆயுதவியல் சோதனை

* சி. ஆர். கத்பெர்ட் சொன்ன கதை *

வெடிகுண்டு சம்பந்தப்பட்ட வழக்குகளில் ஆயுதவியல் பரிசோதகரின் பணி எவ்வாறு உதவுகிறது என்பதை ஒரு ருசிகரமான சம்பவத்தைக்கொண்டு விளக்குகிறேன்.

ஜான் டார்வுட் என்பவர் கோழிப்பண்ணையை நடத்திவந்தார். கிறிஸ்துமஸ் நெருங்கிய போது கோழித் திருடர்களின் திருவிளையாடல்களும் அதிகரித்தன. பண்டிகையை முன்னிட்டு வளர்க்கப்பட்ட கோழியினங்கள் விற்பனையாகும்வரை இரவில் தாமே பண்ணையை காவல்காக்க டார்வுட் முடிவுசெய்தார். ஓர் இரட்டைக்குழல் வேட்டைத் துப்பாக்கியைத் தமக்கு சகாயமாக வைத்துக்கொண்டு அவர் ரோந்து சுற்றிவந்தார். நடுநிசிக்கு மேலாகியும் எதிர்பார்த்த விஷயம் நடைபெறாமல் போகவே டார்வுட் இளைப்பாறுவதற்கு தயாரானார். அப்போது கோழிப்பண்ணையின் அருகிலுள்ள சந்தில் ஒரு மோட்டார் வண்டி மெதுவாக ஓடிவரும் ஒலி கேட்டது.

ஒலி வந்த திக்குநோக்கி அவர் மெதுவாகச் சென்றார். மோட்டார் வண்டி, குஞ்சுகள் வளரும் கூண்டுகளுக்கு அருகில் நின்றிருந்தது. அவர் சுமார் 20 கஜம் தூரத்திலிருக்கும்போது வண்டி கிளம்பி நகர ஆரம்பித்தது. 'மோட்டாரிலிருந்தவர்கள் தம்மைப் பார்த்திருக்கவேண்டும். அதனால்தான் அவர்கள் கிளம்பிவிட்டார்கள்' என்று டார்வுட் முடிவு செய்து கொண்டார். ஆனால் சிறிதுநேரத்துக்குள் மற்றொரு மோட்டார் நிற்கும் ஒலியைக் கேட்டதுமே டார்வுட் முன்பைவிட எச்சரிக்கையாக நடந்துகொண்டார். வேலிக்குப் பின் மறைந்துகொண்டு பார்த்ததில் அது முன்பு வந்த மோட்டார்தான் என்றும், முன்பு நிறுத்தப்பட்ட அதே இடத்தில்தான் மறுபடியும் நிறுத்தப்பட்டிருக்கிறது என்பதையும் அவர் தெரிந்துகொண்டார். மோட்டாரிலிருப்பவர்கள் தணிந்த குரலில் பேசுவதைக் கேட்டதும் வந்தவர்கள் திருடர்களேதாம், சந்தேகமே இல்லை என்று அவர் தீர்மானித்துக்கொண்டார்.

அவர்களை எச்சரிப்பதற்காக ஆகாயத்தைப்பார்த்து ஒருதடவை சுட்டுவிட்டு மோட்டாரை நோக்கி ஓடினார். அதே சமயத்தில் மோட்டாரின் கதவைத் திறந்துகொண்டு ஒரு மனிதன் குதித்தான். தன்னை நோக்கி ஆவேசமாக ஓடிவரும் பண்ணையாரை நோக்கி ஏதோ ஒரு உலோகப் பொருளைப் பிடித்திருந்த தனது வலதுகையை ஓங்கினான். அப்பொழுது தற்காப்புக்காக டார்வுட் இரண்டாவது முறை சுட்டார். அது நேர்குறியாக அமைந்துவிடவே சுடப்பட்டவர் நின்ற இடத்தில் பிணமானார்.

இத்தனை விபரங்களையும் டார்வுட் தாமே தெரிவித்தார். அந்தக் காரிலிருந்த பெண்மணி சம்பவத்தை நேரில் பார்த்தார். என்றாலும், வெகு வேகமாக நடந்த நிகழ்ச்சியினால் மனம் குழம்பிய அவரால், எதையும் கோவையாக சொல்லமுடியவில்லை. அவர்களிருவரும் கோழித் திருடர்களல்ல; சரஸமாடும் காதலர்கள் என்பது மட்டும் அப்பெண்மணியின் கூற்றிலிருந்து வெளிப்பட்டது.

டார்வுட் தற்காப்புக்காகச் சுட்டதாக கூறும் வாதம் எவ்வளவு தூரம் சாத்தியமாயிருக்கக்கூடும் என்பதை நிர்ணயிக்க போலீசார் பிரேத பரிசோதனை செய்தார்கள். குண்டு வீச்சோட்டத்தை கவனிப்பதற்காக துப்பாக்கியையும் இறந்தவருடைய மேலங்கியையும் ஆயுதவியல் சோதனைக் கூடத்திற்கு அனுப்பினார்கள். இறந்தவருடைய மேலங்கியின் வலப்புறத்து நடுவிலும், அதற்கு நேர் சமமான உடலில் தொப்புள் பாகத்திலும் தோட்டா பாய்ந்ததால் இரண்டங்குல துளை விழுந்திருந்தது. காயத்தில் வெளிப்புறத்தில் தீய்ந்துபோன அறிகுறிகள் இருந்தன. காயத்தின் உட்புறம் பரவலாக இல்லாமற் போகவே துப்பாக்கி நேர்க்குறி தூரத்திலிருந்து சுடப்பட்டதாக எளிதிலே நிச்சயமாகிவிட்டது.

சோதனைக்கூட நிபுணர்கள் தங்களுடைய ஊகத்தை உறுதிப்படுத்திக்கொள்ள இறந்தவருடைய துணிகளை ஒரு பொம்மையின்மீது பொருத்தி குண்டு பாய்ந்த விதத்தைக் கவனித்தார்கள். பொருத்திப் பார்த்ததில் ஒரு அம்சம் போலீசார் கவனத்தைக் கவர்ந்தது. பாண்ட், பணியன், சட்டை முதலிய உடைகளில் இருந்த துளைகள் ஒன்றுக்கு ஒன்று சரியாகப் பொருந்தியிருந்தன. ஆனால் கோட்டிலிருந்த துளை, அவற்றுடன் பொருந்தவில்லை. மூன்றங்குலம் கீழாக இருந்தது. மேல் கோட்டிலிருந்த துளை ஐந்தரை அங்குலம் கீழேயிருந்தது. ஒருவர் கையை உயர்த்தும்போது மேலங்கிகளும் உயரக்கூடும். ஆகையால் மேலங்கிகளிலிருந்த துளைகள் உள் அங்கிகளிலிருந்த துளைகளுடன் பொருந்தாமல் சிறிது கீழே இறங்கியிருந்தன. — டார்வுட் கூறிய கதைக்குப் பொருத்தமாக இருந்தது.

இறந்தவர் டார்வுட்டைத் தாக்க வலது கையை ஓங்கியிருந்தால், அவருடைய கோட்டும் மேல்கோட்டும் சிறிது உயர்ந்திருக்கக்கூடும். ஆனால், போலீஸ் நிபுணர்கள் தங்களுடைய சோதனையை நிறுத்திவிடவில்லை. இறந்தவருடைய உயரத்திற்கும் பருமனுக்கும் ஏற்ற அளவுள்ள ஒருவரைத் தேடிப் பிடித்து அவருக்கு இறந்தவருடைய சட்டைகளை அணிவித்து, எதிரியைத் தாக்கும் முறையில் கையை ஓங்கச் சொன்னார்கள். உடைகளிலிருந்த எல்லாத் துளைகளும் ஒரே வரிசையிலிருந்தபோது கையை 120 டிகிரி வாட்டத்தில் ஓங்கவேண்டியதாயிற்று. ஒருவன் எதிரியைத் தாக்க கையை ஓங்கும்போது 120டிகிரி வாட்டத்தில் கையிருக்கும். ஆகையால், இறந்த மனிதன் டார்வுட்டைத் தாக்க கையை ஓங்கியிருக்கக்கூடும் என்று தெரிந்தது. பிணத்தின் வலது கை ஒரு டார்ச் விளக்கை இறுக்கிப் பிடித்துக்கொண்டிருந்தது என்று பிரேத விசாரணையிலிருந்து தெரிந்தது. ஆகவே டார்வுட், எதிரியின் தாக்குதலிலிருந்து தப்பித்துக்கொள்ள தற்காப்பு நோக்கத்துடன் சுட்டார் என்பது உறுதிப்பட்டது. டார்வுட் விடுதலை செய்யப்பட்டார்.

(அடுத்த பக்கம் பார்க்க)

[முன் பக்கத் தொடர்ச்சி]

விஞ்ஞானம் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்க உதவுவதுபோல, நிரபராதிகளை விடுதலை செய்யவும் உதவுகிறது என்பதற்கு இந்த வழக்கு ஓர் உதாரணம்.

ராணுவத் தளவாடச் சாலையி லுள்ள ஆயுதவியல் நிபுணருக்கும் வேற்றுமைகள் உண்டு. ராணுவத் தளவாடச் சாலையில் பணியாற்று கிறவருக்கு வெடிமருந்துகளின் தரத்தைப்பற்றியும் ஆயுதங்களின் வல்லமை பற்றியும் தெரிந்திருந் தால் போதும். ஆனல் போலீஸ் துறையில் பணியாற்றும் ஆயுதவி யல் நிபுணர் பல துறைகளில் பயிற்சி பெற்றவராக இருத்தல் வேண்டும். சிறு ஆயுதங்களைப்பற் றியும், அவை பாயும் தூரம், பாயும் வேகம் முதலிய தகவல்களையும், குண்டுக் காயங்களைப் பற்றியும், அவை எந்தக் கோணத்திலிருந்து சுட்டதால் ஏற்பட்டது என்று ஊகிக்கவும் வெடிமருந்துகளைச் சோதிக்கவும், நுண்பெருக்காடியை உபயோகித்துப் பொருள்களை ஆராயவும், புகைப்படங்கள் எடுக்க வும் அவர் தெரிந்துகொள்வேண் டும். நீண்டகாலப் பயிற்சியினுல் தான் இவற்றைப் பெறமுடியும்.

பிரேத பரிசோதகர், குண்டுக் குப் பலியான ஒருவர் உடலிலி ருந்து எடுத்த ரவைகளை பஞ்சில் பொதித்து சோதனைக் கூடத் திற்கு அனுப்புவார். போலீஸ் சோதனையில் துப்பாக்கி கிடைத் தால், அந்தத் துப்பாக்கியையும் சோதனைக்கூடத்திற்கு அனுப்பு வார்கள். இறந்தவர் உடலிலிருந்து கிடைத்த ரவைகளுக்கும் போலீ ஸார் அனுப்பிய துப்பாக்கிக்கும் பொருத்தம் இருக்கிறதா என்று கண்டுபிடிக்கும் பொறுப்பு நிபு ணர்களைச் சேர்ந்தது. சிலசமயங் களில் காலித் தோட்டா மட்டுமே கிடைக்கும். ரவைகளை வைத்துக் கொண்டு, அவை இன்ன துப்பாக் கியால் சுடப்பட்டது என்று ருசுப் படுத்துவதுபோல காலித் தோட் டாவைக்கொண்டு ருசுப்படுத்த முடியாது. தோட்டாவில் குதி ரையடிபட்ட தழும்பு தவிர வேறு அடையாளம் இராது. ஆகவே வேறு தடையங்களைக்கொண்டு தான் இன்ன துப்பாக்கியால் இப் படிச் சுடப்பட்டது என்று ஊகிக்கவேண்டும். வேட்டைத் துப்பாக்கிகளை நேர்குறிபார்த்துச் சுட்டால், குண்டு சாதாரணமாக ஐம்பது கஜ தூரத்திற்குத்தான் பாயும். ரவைகள் சிதறிப் பாய்வ திலிருந்து சுமார் இத்தனை அடி தூரத்திற்கு அப்பால் நின்று சுட் டிருக்கலாம் என்று கூறமுடியும். உடலிலுள்ள தீப்புண், வெடிப் புகை, அது படர்ந்துள்ள தோற் றம் முதலியவற்றைக்கொண்டும் துப்புத் துலக்கமுடியும்.

குற்றவியல் ஆராய்ச்சிக்கூடங் களில் பணியாற்றும் நிபுணர்கள் (விஞ்ஞானிகள்) குற்றம் சாட்டும் போலீஸாருக்கு துணைசெய்யவே உழைக்கிருர்கள் என்று கூறமுடி யாது. அவர்கள் நீதிமன்றத் திற்கு சான்றுகளைத் தரவே பணி யாற்றுகிறுர்கள். ஃ





Edited Printed & Published by Triloka Sitaram for The Shivaji Private Ltd., at S. N. Printers, 55, Chintamani Bazaar, Tiruchy-2.